706. ஆரம்பத்தில் சுகம், துக்கம், போலவும், துக்கம் சுகம் போலவும் தோன்றும்.

707. சுக துக்கங்கள் எவன் மனதை அசைக்கவில்லையோ அவனைத் தேவர்கள் சிநேகிக்க வருகிறார்கள்.

708. சுக துக்கங்களும் அதன் அனுபவங்களும் பிரயோஜனங்களும் சரீரத்துக்கா, இந்திரியங்களுக்கா, பிராணனுக்கா, மனத்திற்கா, ஜீவனுக்கா என்பதை முதலில் நன்றாகத் தெரிந்து கொள்ளவேண்டும்.

709. உண்மையாய் ஞானமடைய முயற்சி செய்கிறவர்களுக்கு அஷ்ட திக்கு பாலகர்களும் சகாயஞ்செய்கிறார்கள், மறைவாகவே பின்னால் வந்துகொண்டே யிருக்கிறார்கள்.

710. நல்ல அறிவை அடையாமலும் மூடத்தன்மையிலுமிருந்து விலகியவர்கள் அளவுகடந்து சந்தோஷிப்பார்கள். எல்லையின்றித் துக்கிப்பார்கள்.

711. பிரபஞ்ச லௌகீகதிருஷ்டி உடையவர்களுடன் சகவாசஞ் செய்வது யோக ஞானப்பியாசிகளுக்குப் பெரியஆபத்து.

712. பெரிய பட்டணங்களையும் பெரிய வனாந்தரங்களையும் சமமாகப் பார்க்கிறவன் தெளிந்த உத்தமஞானி.

713. ஆத்மா விஷயத்திலும் சரீர விஷயத்திலும் ஸ்திரீ புருஷபேதம் பார்க்காதவன் அதிசூக்ஷ்ம அபேத ஞானி.

714. யாதொரு முயற்சியும் யோஜனையுமில்லாமல் நிருவிகல்ப ஸமாதி வந்துவிடுவது சகஜ நிஷ்டர்களின் சுபாவம்.

715. வாக்குமாத்திரம் வசனியாமல் சகல இந்தியங்களும் மனதும் அலைந்துகொண்டிருப்பதைக் கைக்கொண்ட மவுனிகள் கர்மேந்திரிய கபட யோகிகள்.

716. உள்ளதை உள்ளபடி சொல்வதால் பாரமார்த்தீக விரோதமில்லாவிட்டாலும் வியாவகாரிக விரோதமுண்டு.

717. உண்மை ஞானிகளின் நிலைமையை இன்னபடியென்று உறுதியாக நிச்சயித்துவிட முடியாது.

718. பற்றை விடுவதும் பற்றை அடைவதும் பந்தம்.

719. சகல லோக கர்த்தாவாகிய பரவாசுதேவர் சகல ஞான கர்த்தாவாகிய மஹாதேவர் சகல யோக கர்த்தாவான ஹிரண்யகர்ப்பர் சகல தர்ம கர்த்தாவாகிய மஹேஸ்வரர் சகல வீர்ய கர்த்தாவாகிய லக்ஷ்மி சகல பராக்ரம கர்த்தாவாகிய மஹேஸ்வரி சகல வித்யா கர்த்தாவாகிய சரஸ்வதி சகல சாங்கிய கர்த்தாவாகிய கபிலமஹரிஷி சகல தேஜோ கர்த்தாவாகிய சதா சிவன் இவர்களெல்லோருடைய அந்தரங்க அனுபவம் ஒன்றே.

720. எந்த விஷயத்திற்கும் எக்காலத்திலும் எவரிடத்தி லும் உயர்வு தாழ்வு உற்பத்தியாகாத மனதில் உண்மை ஞானம் பிரதி பலிக்கிறது.

721. ஆத்மாவாகிய நமக்குத் தெரியாமல் யாதொரு சங் கல்பமும் உதிக்கக்கூடாதென்று கட்டுப்பாடு செய்துகொண்டு அதன்படி அனுஷ்டித்து வந்தால் சில வருஷங்களில் மனோலய ஸமாதி வந்துவிடும்.

722. நிர்மானுஷ்யமான பரம ஏகாந்த ஸ்தானத்தில் தனி மையில் ஆத்மவிசாரஞ் செய்துகொண்டிருப்பதனாலுண்டாகிற சக்தியில் பதினாயிரத்திலொருபங்கு கூட வேதசாஸ்திரங்களைக் கற்பதினாலும், உபந்நியாஸம், தீர்த்தயாத்திரை, ஆலயதரிசனம், இவைகளாலும் உண்டாகிறதில்லை.

723. பரமாத்மாவுக்கும், ஜீவாத்மாவுக்கும் மத்தியில் ஒன்றுமேயில்லையென்று நினைக்கிற வஸ்து ஒன்றுமட்டும் இருக் கிறதென்று மஹாபுருஷராகிய ஸ்ரீ சங்கரர் சொல்லுகிறார்.

724. சதா ஆடிக்கொண்டிருக்கிற வஸ்துவை ஆடாது நிறுத்திவிடலாம் ஒருக்காலும் ஆடாத வஸ்துவை ஆட்டிவைக்க முடியாது.

725. எல்லாவற்றையும் வெறுத்தவர்களுக்கு உலகத்தில் என்னவேலையென்று சாமான்ய பாமரஜனங்கள் சொல்லுவது வேதத்தின் ரகஸ்யம்.

726. நாமே நம்முடைய மாயாசங்கல்பத்தினால் நம்மை மறைத்துக்கொண்டிருக்கிறோம்.

727. சித்தர் மதகர்த்தாவான அஸ்வினிதேவர்களுடைய அந்தரங்கமதமே இனிமேல் உலகத்தில் பரவப்போகிறது.

728. பிரபஞ்சத் தோற்றங்கள் மறைந்துவிடுவதனல் மட்டும் பிரம்மஞானியென்று சொல்லிவிடமுடியாது.

729. மனச்சந்தேகமும், அஞ்ஞானமும், ஆசையும் உடையவர்களுக்கு மட்டும் சாஸ்திரங்கள் பிரயோஜனப்படும்.

730. ஆத்மஞான ரேசகம் இரண்டு நாழிகை பரிபந்தம் சித்தியானவர்களுக்குச் சூக்ஷ்ம சரீரத்துடன் ஆகாயத்தில் சஞ்சரிக்கிற மஹான்கள் பிரசன்னமாகிருர்கள்.

731. பிரம்மாந்திரத்தின்மேல் பூர்ண ரேசகத்தால் பிராணவாயு அசையாது நின்றுவிடுகிற காலத்தில் பரகாயப் பிரவேஸசித்தி உண்டாகிறது.

732. வெளிக்கும்பகமும் உள் பூரகமும் மத்தியரேசகமும் ஒன்றுகூடி நின்ற காலத்தில் ஸ்தூல சரீரத்தை ஆகாயத்தில் சஞ்சரிக்கச்செய்யும்.

733. தான்செய்கிற பாபபுண்ணியங்களெல்லாம் காலக்கிரமத்தில் தன்னையே வந்தடைகின்றன.

734. சில கெட்டவஸ்துக்கள் மோக்ஷசாதனமாகவும் சில நல்லவஸ்துக்கள் பந்த சாதனமாகவும் ஆகின்றன.

735. நாம் பற்றை விடுவதைக் காட்டிலும் பற்று நம்மை விடும்படி செய்துகொள்ளுவது உத்தமம்.

736. உலகத்திலுள்ள சகல ஜனங்களையும் பொதுவாகப் பாவித்து உபதேசிப்பது உத்தம ஞானிக்கு லக்ஷணம்.

737. ஒவ்வொரு சங்கல்பத்திலும் ஒவ்வொரு சூக்ஷ்ம சிருஷ்டியும் பல ஜென்ம சமஸ்காரங்களும் அடங்கியிருக்கிறதென்று மஹாத்மாவாகிய பிரஹஸ்பதி பகவான் சொல்லுகிருர்.

738. உலக மயக்க வஸ்துக்களும் காலாந்தரத்தில் ஞான சாதனமாக முடிகிறது.

739. அதிகக் காரமும், புளிப்பும், உப்புங் கலந்த பதார்த்தங்கள் சம்பந்தப்படுவதால் மனேசலனமும் காமக்குரோத விருத்திகளும் சரீரத்திற்கு ரோயும் உண்டாகின்றன.

740. மதாபிமானம், சாஸ்திராபிமானம், தேசாபிமானம், குலாபிமானம், சரீராபிமானம், அஞ்ஞான ஜீவகாருண்யம் இவைகளுங்கூட உத்தம ஞானத்திற்குத் தடையாயிருக்கின்றன.

741. நான்கு ஜாதிகள், நான்கு ஆஸ்ரமங்கள், அவற்றின் கட்டுப்பாடுகள் இவற்றையெல்லாம் வெகுகாலங்களுக்குமுன் உத்தம ரிஷிகளால் நல்லெண்ணத்துடன் உற்பத்தி செய்யப்பட்டதாயிருந்தாலும் சுதந்தர ஆத்மஞானத்திற்குத் தடையாயும், சரீரத்தைமட்டும் பொருந்திய கற்பனுவடிவமாயும் ஆத்ம மனோதர்மங்களுக்கு யாதொரு சம்பந்தமில்லாதிருக்கின்றது.

742. இஷ்டப்பட்ட வஸ்துக்களில் இச்சையும், இஷ்டப்படாத வஸ்துக்களில் இச்சையின்மையும் இல்லாதவர்களுடைய ஹிருதயத்தில் உலக இன்பதுன்பங்கள் பதிவதில்லை.

743. பரமாத்மா ஒன்றைத்தவிர மற்ற வஸ்துக்களை யெல்லாம் துரும்பாக நினைப்பது நிராசையை அடைவதற்கு ஓர்சிறந்த வழி.

744. பேசாதிருந்துகொண்டு வாக்கை ஜெபிப்பதைவிடப் பேசிப் பேசி ஜெபிப்பது ரிஷிகளது சித்தாந்தம்.

745. திருப்பாற் கடல், ஸ்வேதகிரி, வைஜயந்தி இம்மூன்றிடங்களில் மூன்று ஏகாந்த ஸ்தானங்களை ஏற்படுத்திக்கொண்டு முறையே நாராயணன், சங்கரன், நான்முகன் மூவரும் வாசஞ்செய்துகொண்டு பாரமார்த்தீக விசாரணையிலிருந்துவருகிறார்கள்.

746. குண்டலினீசக்தியும், ஞானசக்தியும் சம்பந்தப்பட ஆரம்பிக்கும்போது கூர்மநாடி பிரம்மரந்திரத்தில் செல்லும் அப்போதே அஷ்டமாசித்திகளின் அறுபத்துநான்கு தெய்வீக வடிவங்கள் பிரசன்னமாகிறது.

747. உலகமயக்க அநித்திய வஸ்துக்களை விரும்பி உலகாதீத உத்தமனிடத்திலும் முற்றுந்துறந்தமுநியோர்களிடத்திலும் முறையிடுவது நியாயமல்ல.

748. அபூர்வ அஷ்டமாசித்திகளின் ஆசையால் பிரயத்தன யோகாப்பியாஸஞ்செய்பவர்களுக்குச் சித்திகள் பிரசன்னமானாலும் மீண்டும் பல ஜென்மங்களுக்கு ஆளாகிறார்கள்.

749. பிரஹ்மத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிற ஞானப்பியாசிகளுக்கு அந்தர் முகத்தில் தடைகளுண்டாகு மானல் பகிர்முகக்கடமைகளில் பாக்கியிருக்கிறதென்று தெரிந்து கொள்ளவேண்டும்.

750. பரமாத்ம உணர்ச்சியுடன் அபேதமாக சகுணத் தியானஞ்செய்வது நிர்க்குணத்தியான மென்றே வேத புருஷன் கூறுகிறான்.

751. சகுணத்தியானஞ் செய்துவரப் பிரயத்தனமில்லா மலே நிர்க்குணத்தில் சேர்ந்து விடுகிறான்.

752. யோகமும் ஞானமும் ஒன்றைவிட்டொன்றைப் பிறி க்க முடியாத தத்துவங்கள்.

753. இப்போதிருக்கிற விஷ்ணு, பிரம்மா, சிவன் இம் மூவருக்குப்பின் அந்த ஸ்தானங்களுக்கு முறையே நாரதர், ஹனு மார், நந்தீஸ்வரர் என்ற மூவர்களும் தயாராயிருக்கிறார்கள்.

754. சிங்கம், புலி, கரடி, யானை இவைகள் வசிக்கக்கூடிய மகா பயங்கரமான நிர்மானுஷ்ய வனாந்தரத்தில் தனிமையாக வசித்துக்கொண்டு உலக ஆசையை ஜெயிப்பதைக்காட்டிலும் பிர பஞ்சமயக்க அநித்திய வஸ்துக்கள் நிறைந்த பெரிய பட்டணங்க ளின் நடுவில் பல ஜனங்கள் மத்தியிலிருந்துகொண்டு ஜெயிப்பது மகா விசேஷம்.

755. மனச்சாக்ஷிக்குச் சம்மதமில்லாமல் கட்டுப்பாட்டுக் காகச் செய்யப்படுகிற எந்தக்காரியங்களும் நிலையானதும் உத்தம மானதுமல்ல.

756 ஆரம்பித்த எந்தக்காரியங்களும் பூர்த்தி பெறவில்லை யானல் அதினின்றும் விலகிவிடவேண்டும். அல்லது பிராயோ பப்பிரவேஸம் செய்துவிடவேண்டும்.

757. தெய்வத்தை நம்பித் தெய்வசம்மதமாகச் செய்யப் படுங்காரியங்களையன்றி மனுஷ்யர்களைநம்பி மனுஷ்ய சம்மதமாகச் செய்யப்படுங்காரியங்கள் நிலைபெறமாட்டாது.

758. உத்தமமான தெய்வீகத்தன்மை பொருந்திய, உண் மையுள்ள, உறுதியான, யாதொரு பிரதிப் பிரயோஜனத்தையுங்

கருதாத மஹத்தை யுணர்ந்த உபதேஸ கர்த்தாக்களான பிரஹ்ம ஞானிகள் சஞ்சரிக்காத தேசங்களில் அசுரசம்பத்தோடு கூடிய வர்களும் குதர்க்க மார்க்கங்களில் செல்பவர்களுமான பிரஜைகள் நிரம்பியிருப்பார்கள்.

759. உள்ளதை இல்லாததாகவும் இல்லாததை உள்ளதாக வும் செய்துவிடக்கூடிய மஹாமாயையின் சொரூபத்தை இன்ன படியென்று கண்டுபிடிப்பதற்குப் பிரஹ்ம விசாரமே தகுந்த உபாயமென்று பத்ரி நாராயண மஹரிஷி உபதேசிக்கிறார்.

760. இச்சையும் இச்சையின்மையும் இரண்டுமுள்ளதும் இரண்டுமில்லாததும் ஆகநான்கும் இந்த நான்கையுந்தாண்டிய தும் இவ்வைந்துமில்லாத ஹ்ருதயத்தை யுடையவர்கள் நிர்விகார நிருவிகற்ப ஞானிகள்.

761. மனத்தோடுமட்டும் அனுஷ்டிக்கக்கூடியது, இந்திரி யங்களோடு மாத்திரம் செய்யக்கூடியது, சரீரத்தோடும், சரீரத் திற்குட்பட்ட விவகாரங்களோடும், சிலர்களோடும், பலர்க ளோடும், சிலதூரங்களோடும், பலதூரங்களோடும், அனுஷ்டிக் கக்கூடிய அனுஷ்டான முறைகள் ஈஸ்வர சம்மதமானது நியாய மானது.

762. வெளியில் மட்டும் பற்றை விட்டு உள்ளே பற்றை வைத்துக்கொண்டிருப்பதும் உள்ளே பற்றை விட்டு வெளியில் பற்றை வைத்திருப்பதுமான துறவிகளில் அகத்துறவிக்கு ஆத்ம ஞானமும் புறத்துறவிக்குப் புண்ணியமும் கிடைக்கிறது.

763. ஒன்றையுங்கருதாத வுள்ளத்தில் ஒன்று கருதப்படு மானால் அது சவிகற்ப சமாதி.

764. மனத்தாலும் கண்களாலும் பார்க்கக்கூடிய வஸ்துக் களையெல்லாம் பரமாத்மாவாகப் பார்க்காவிட்டாலும் பார்க்கமுடி யாமற் போனாலும் பரமகுருவாகப் பார்க்கிறதனால் பரமபாக்கிய ஸ்தானம் பலிதமாகிறது.

765. சர்வவல்லமையுள்ள வஸ்துவும் ஒரு வல்லமையுமில் லாத வஸ்துவும் பிரஹ்மம்.

766. வேகமாக எழும்பப்படுகிற மனோசங்கல்பங்களை மெதுவாக எழும்பும்படி சாந்தமடையச்செய்து அதையும் உபசாந்

தப்படுத்தி அதிரகஸ்ய வஸ்துவில் கறைந்து விடும்படி செய்வது ஆத்மப் பிரஹ்மயோகம்.

767. ஏழாயிரந்தரம் பிரணவ முச்சரிக்கும்வரை பிராண வாயுவைப் பிரம்மரந்திரத்தில் நிலைபெறச் செய்துவிட்டால் பர காயப்பிரவேச சித்தியும்ஆகாயகமன ஆரம்பமுமுண்டாகின்றன.

768 உண்ணும்போது சூரியகலையின் அக்கினி அம்சத்தி லும் உடுக்கும்போது சந்திரகலையின் பூமி அம்சத்திலும் பேசும் போது பூரணகலையின் ஜலாம்சத்திலும் உறங்கும்போது சூரிய கலையின் ஆகாச அம்சத்திலும் ஆத்மவிசாரஞ் செய்யும்போது அதி சூக்ஷுமகலையிலும் பிராணவாயுவை நிறுத்துகின்றவர்களு க்கு உத்தம புருஷராகிய எமதரும ராஜனுடைய பயமில்லை

769. அன்பு, அறிவு, அடக்கம், அமைதி, ஆதி, உயர்வு, உபாயம், உறுதி, உத்தமம், உதாரம், சாந்தம், சமம், சகஜம்,சக்தி, சத்தியம், சித்தி,ஞானம், தைரியம், தருமம், தானம், நிராசை, பரி சுத்தம், முக்தி, மௌனம், வீர்யம், வேதம், மாருத ஆனந்தம், தேஜஸ், இவைகளெல்லாம் ஒருங்கே அமையப்பெற்றுள்ளவர்கள் மஹாத்மாக்கள்.

770. உத்தமஞானி, உத்தமயோகி, உத்தமபக்தன், இம் மூவர்களுடைய அந்தக்கரண விருத்தியானது ஒரே சத்துவ குணத்தை மீறி அப்பாற் செல்லவில்லை.

771. எந்தக் காரணங்களைக் கொண்டாவது பிரபஞ்ச ஜீவர் களைப் பிரம்மிக்கும்படி செய்து ஏமாற்றி விடும்பக்ஷத்தில் சில காலங்களுக்குப்பின் அந்த ஏமாற்றம் ஏமாற்றியவர்களையே வந் தடைகின்றன.

772. இன்பதுன்பங்களின் முடிவான எல்லை கண்டவர்கள் இவ்வுடம்போடு இந்தவுலகத்தில் வசிக்க ஆசைப்படுவதில்லை.

773. கிருதயுகத்தில் சத்தியத்தினுல் மட்டும், திரேதாயுகத் தில் அன்பினுல் மட்டும், துவாபரயுகத்தில் அறிவினுல் மட்டும் கலியுகத்தில் அதிகாரத்தினுல் மட்டும் அந்தந்த யுக காலங்களி லுள்ள அரசர்களால் ராஜ்ய பரிபாலனம் நடந்து வருகிறது.

774. சத்தியத்தில் அசத்தியத்தையும் அசத்தியத்தில் சத்தியத்தையும் கற்பிப்பவர்கள் நாஸ்திகர்கள்.

775. தெய்வீகத்தன்மைவாய்ந்த ஈஸ்வரசக்தி பொருந்திய சர்வமதங்களுக்கும் உலகங்களுக்கும் பொதுவான சமரஸ சுபாவமுள்ள தேஜோமயவடிவரான ஓர் அவதாரபுருஷன் தோன்றியிருக்கிறான். ரகஸ்யஸ்தானத்தில் வசித்துவருகிறான் கூடியகாலத்தில் தோன்றப்போகிறான்.

776. பக்தியோகத்தால் வசப்படாத மனத்தை மற்ற எந்த யோகத்தாலும் வசப்படுத்தமுடியாது.

777. புண்ணியதீர்த்தங்களில் அடிக்கடி ஸ்நானம் செய்வதால் நாடிசுத்தியும் ரத்தசுத்தமும் சரீரஆரோக்யமும் உண்டாகின்றன.

778. எல்லாம் வல்ல இறைவனாகிய எம்பெருமானது பாதாரவிந்தத்தை இடைவிடாது தியானித்துக் கொண்டிருக்கிற மஹாபக்தர்களது பாததூளியைச் சிரமேற்றாங்கி யிருப்பவர்களுக்குச்செய்யும் கைங்கரியமே பரமமோக்ஷசாதன மென்று உண்மைத் தொண்டர்களுக்குத் தலைவரான நாரத மஹரிஷி பாஞ்சராத்ரத்தில் கூறியிருக்கிறார்

779. சுதந்தர கர்மயோக அகங்கார நிச்சயத்தால் கரும யோகப்பிரயோஜனப் பிராப்தியின் அனுபவமும் பரதந்திர கைங்கரிய நிஷ்காம நிச்சயத்தால் சாந்தகுண ஞான பலப்பிராப்தியின் அனுபவமும் சம்பவிக்கின்றன.

780. அஞ்ஞான அனுபவ குணமும் சத்துவ வித்தியா அகங்காரமும் யதார்த்தமான ராஜஸவிருத்தியும் அதன் அனுபவங்களும் அவதார புருஷர்களுக்குங்கூட உண்டாகின்றன.

781. தான் பூரண ஞானியானபின் தன்னைப்போல் சகலரும் ஆகவேண்டுமென்றும் தான் அஞ்ஞானியாயிருப்பதால் தனக்குச் சித்தசுத்தியும் ஞானமும் உதயமாகவேண்டுமென்றும் இந்த இரண்டுவித உலக உபகாரிகளும் உத்தமமானவர்கள்.

782. மெய்யான விஷயங்களைப் பொய்யாகவும் பொய்யான விஷயங்களை மெய்யாகவும் பிரயோஜனமில்லாத காரியங்களில்

விருப்பமும் பிரயோஜனமுள்ள காரியங்களில் வெறுப்பும் வேத வாக்கியங்களில் அவநம்பிக்கையும் அசிரத்தையும் கொண்டவர்களுடைய ஹிருதயத்தில் பூர்வ ஜென்மாந்தர பாபங்களும் அழுக்கும் படிந்திருக்கிறதென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

783. கலப்பில்லாத உத்தம ஞானேதயத்தை யடைந்தவர்கள் நிருவிகல்ப சமாதியைத்தவிர வேறுஒன்றுக்கும் உபயோகப் படமாட்டார்கள்.

784. சமஸ்த வஸ்துக்களையும் பிரஹ்மமாகவாவது தானாகவாவது பார்ப்பதால் காமக்குரோதாதி பதின் மூன்று கெட்ட குணங்களும் ராகத்து வேஷாதி விருத்திகளும் உண்டாவதில்லை.

785. சமஸ்த உலக சுகங்கள் நவரசங்களின் சூக்ஷம சுகம், அறுசுவை உணவுகளின் சுகம். ரூபங்களின் சகல சுகம், சர்வ வாசனைகளின் சுகம், சயன மாதர்களது சமஸ்த ஸ்பர்ஸ சுகங்கள். வித்யாசுகம், சஞ்சாரசுகம், அஞ்ஞான அபேதசுகம், இவைகளை யெல்லாம் வெறுத்தவர்களது ஹிருதயத்தை, யோக சுகம் மெல்ல வந்து எட்டிப்பார்க்க ஆரம்பிக்கிறது.

786. தர்மத்தைமட்டும் ஸ்தாபிக்கவந்த அவதார புருஷர்களுக்கும்,மதத்தைமட்டும் நிலைநிறுத்தவந்த ஆசாரியர்களுக்கும், துஷ்டர்களை மட்டும் அடக்கவந்த ஹம்ஸபூதர்களுக்கும், உள்ள பிரஹ்ம சுகத்தைக்காட்டிலும் ஒன்றையுங்கருதாததை ஸ்தாபிக்க வந்த உத்தமோத்தமர்களுக்கு அதிகம்.

787. எந்தக்காலத்திலும் மாற்றமடையாத மஹான்களது ஹிருதயத்தில் ஏதாவது மாற்றமுண்டாகுமானுல் அது சத்திய சங்கல்பமென்று நிச்சயிக்கவேண்டும்.

788. அதிக ஜனங்களுக்கு அவாந்தர ஞானத்தை உபதேசிக்கலாமேயன்றிச் சாக்ஷாத் ஞானத்தை ஏகதேச ஜீவர்களுக்கு மட்டும் உபதேசிக்கமுடியும்.

789. உற்பத்தி நாசமில்லாத வஸ்துவினிடமிருந்து உற்பத்தி நாசமுள்ள வஸ்துக்கள் உண்டாயிருக்கக் காரணமில்லையென்று விசிஷ்டாத்வைதம் கூறுகிறது.

790. ஒரேதத்துவ சொரூபத்தில் ஒன்றையும் இரண்டையும் மூன்றையும் அத்வைத த்வைத விசிஷ்டாத்வைத ஆசாரியர்கள் கற்பிக்கிறார்கள்.

791. எப்போதும் நம்மைவிட்டுப் பிரியாத வஸ்துவில் பிரியம் வைப்பது ஞானயோகமென்றும் பிறிகிற வஸ்துவில் பிரியம் வைப்பது பக்தியோகமென்றும் பெயர்

792. நம்மால் ஆகக்கூடாத காரியம் பாரமார்த்திக வியாவகாரிகமென்ற இரண்டிலுமில்லை யென்று ஒவ்வொரு ஜீவர்களும் எண்ணவேண்டும்.

793. ஒன்றில் ஒன்றற்றவாதமும் இரண்டில் ஒன்றில்லாதவாதமும் பயனற்றது.

794. பிர்ம்மதேவரிடத்திலும் பிராம்மணன், பறையன், கழுதை, புழு, நாய், இவர்களிடத்திலும் ஓரே பரமாத்மாவைப் பார்க்கிறவன் உத்தமஞானி.

795 பற்றும் பற்றுமில்லாத்தும் இல்லாத ஹிருதயத்தில் உண்மையான தேஜோ ஞானம் உதயமாகிறது.

796. நமக்கு ஞானம் உதயமாகுமோ ஆகாதோ என்ற சந்தேகமுடைய அபாவ ஞானிகளிடமிருந்து ஞானசக்தி, வீர்ய சக்தி இரண்டும் விலக ஆரம்பிக்கிறது.

797. ஜன்ம மரண நாசம், மனோதுக்க நிவிர்த்தி, உண்மை ஞானத்தோற்றம், மனோலயசமாதி, சர்வசந்தேகதீரம், பரமாத்ம தரிசனம் இவைகள் பொருந்தியுள்ள மதமே வைதீகம்.

798. எல்லா யோகங்களும் ஹிருதயத்தோடு முடிகிறபடியால் ஹிருதயமுந் தாண்டிய யோகத்தை அடையவேண்டுமென்று புத்த பகவான் கூறியிருக்கிறார்.

799. அகண்டமான ஒரு வஸ்துவினிடத்தில் அகண்டமல்லாத பல வஸ்துக்கள் தோற்றுவது சகஜம்.

800. ஈஸ்வர கிருபையாலும், குருவின் காருண்யத்தினாலும், புருஷப்பிரயத்தனத்தினாலும் பல இடையூறுகளைத் தாண்டிப் பரமாத்மப்பலனை அடையப்போகுந் தருவாயில் பலமான புதிய ஓர் பிரதிபந்தம் வெகு நளினமாக வந்து பொருந்தும்,

801. நாம் நினைக்கிற ஒவ்வொரு நினைப்புகளும் ஒவ்வொரு ஜென்மங்களென்று மனத்தின் நிஜசொரூபத்தை உணர்ந்தவர்களும் ஜென்ம மரணங்களின் யதார்த்தத்தை அறிந்தவர்களும் கூறுகிறார்கள்.

802. பிரபஞ்ச சிருஷ்டிகளில் உண்மைஞானிகள் ஆச்சரியப்படத்தக்க வஸ்துக்களும் செய்கைகளும் இல்லவே இல்லை.

803. நிவிர்த்தி மார்க்கத்தைப் போதித்துக்கொண்டு வருபவர்களுக்குப் பிரவிர்த்தி மார்க்கபோதகர்கள் தடைசெய்வது எக்காலத்தும் தேவ அசுர மனுஷவர்க்கங்களிலிருக்கின்றன.

804. மதம், தேசம், வேதம், ஸ்திரீகளின் கற்பு, இவைகளுக்கு அபாயமான ஆபத்து உண்டாகுங்காலங்களில் உயிரைக் கொடுத்துக் காப்பாற்றக்கூடிய ஆற்றலுள்ள தீவிரதர ஹிருதயமுடையவன் தேவாம்சமுடைய பரமபாக்கியசாலி.

805. மதஸ்தாபனமும், கக்ஷிப்பிரதிக்கக்ஷிகளும், அகங்காரமும், வீண் எண்ணங்களும் அறியாமையிலிருந்துண்டாகின்றன.

806. பிரஹஸ்பதி பகவான் சிறந்த மஹரிஷிகளது கூட்டத்தில் யாதொரு ஜீவஹிம்ஸையுமில்லாத பூஜை, யாகம், ஹோமம், புண்ணியகாரியம், யோகம், ஆஸனம், செய்கை சிகிச்சை இவைகளைச் செய்வதுதான் உத்தமமென்று வற்புறுத்தியிருக்கிறார்.

807. உலக சுகதுக்கங்கள் செவிக்குக் கூடவராத நிலைமையிலிருந்து கொள்வது ஒருபெரிய யோகமென்று ஜாபாலமஹரிஷி கூறுகிறார்.

808. அதிரமணீயமான ஆச்சரியமுள்ள அபுரூபமுடைய அறுசுவை உணவாதிகளைக்கண்டபோது எவன் மனது பிரமித்து ஆனந்தமடைந்து நாவில் ஜலம் ஊறுகிறதோ அவன் யோகம், ஞானம், மோக்ஷம்,என்ற வார்த்தைகளையே விட்டுவிடவேண்டும்.

809. சாதாரணமான நித்திரையினின்றும் விலகியவர்களுக்கு அதன் மயக்கந்தீரச்சில விநாடிகள் செல்லுகின்றது. பரமாத்மஞான நிஷ்டையாகிய நனவில் சுழுத்தியினின்றும் விலகியவர்களுக்கு அதன் மயக்கம் தீருவதேயில்லை.

810. வாக்கு, சரீரம், மனம், என்ற மூன்று கரணத்தையும் பற்றிநிற்பது கரும யோக அனுஷ்டானம், மனம், வாக்கு, என்ற இரண்டையும் பற்றி நிற்பது பக்தி யோக அனுஷ்டானம்.

811. அதி சூக்ஷ்ம யதார்த்த அந்தரங்க அனுபவமே இன்னதென்றுதெரியாதவர்களது கண்களுக்குப் பகிரங்க ஸ்தூல சரீர கரும பேதத்தின் தோற்றங்களே அபரிமிதமாகப் புலப்படுகின்றன.

812. பாபத்தைப்போலவே புண்ணியத்தையும், அதர்மத்தைப் போலவே தர்மத்தையும், ஞான யோகிகள் விட்டுவிடவேண்டும்.

813. வைதீக ஞானமதத்தின் அனுஷ்டானத்தையே எதார்த்த சாங்கிய மதம் கற்பிக்கிறது.

814. பிராம்மண, க்ஷத்திரிய, வைஸ்ய, சூத்ர, பிரம்மசர்ய கிருகஸ்த, வானப்ரஸ்த, சந்நியாஸமென்று சொல்லப்படுகிற வருணாஸ்ரமங்களையும், அவற்றின் தர்மங்களையும், கட்டுப்பாடுகளையும், உலகத்திலுள்ள, சகல மதங்களின் பந்தங்களையும், கர்ம யோக, பக்தியோக, ஞானயோகமென்ற மூவகை யோகங்களின் நிபந்தனைகளையும் வேதாகம புராணஸ்மிருதிகளில்கூறும் எல்லாக் கட்டுப் பாடுகளையும் ஒருங்கே கடந்தவர்கள் சர்வசங்கபரித்தியாகிகள்.

815. ஒரேகடவுள், ஒரேஜாதி, ஒரேமதம், என்ற தத்துவத்தை உலகமுழுவதும் பரவச்செய்யவேண்டுமென்று எண்ணங்கொண்ட தீவிர மஹரிஷிகள் கிரேதா, த்ரேதா, துவாபர, கலி, முதலிய நான்கு காலங்களிலுமிருக்கின்றார்கள்.

816. சத்திய சொரூபமான பரமாத்மாவை அறியாதவர்கள் சத்தியமென்று எதை நிச்சயத்திருக்கிறார்களோ அதை உண்மை ஞானிகள் நிச்சய மல்லாததென்று நிச்சயப்படுத்தி விட்டார்கள்.

817. எதார்த்தஞானம், சாஸ்திரஆராய்ச்சி, போதனாசக்தி, ஆகர்ஷணசக்தி, இந்த நான்கும் உள்ளவாறு ஒருங்கே அமையப்பெற்றுள்ளவர்கள் போதிக்கத்தகுந்த அதிகார அவதார புருஷர்கள்.

818. உண்மையை மறைத்து விடக்கூடிய கற்பனு சாஸ்திரங்களையும் வாக்கியங்களையும் நம்புவது கூடாது.

819. மனுஷ்யர்களுக்குள் ஒருவர்க்கொருவர் அடங்கி நடக்கவேண்டுமென்ற எண்ணமும், அடிமை என்ற சங்கல்பமும் உண்மை ஞானத்திற்கு விரோதமாயிருக்கிறது. ஈஸ்வர சம்மதமுமல்ல.

820. இராத்திரி காலங்களில் அன்னியர்களுடைய பிராண வாயுவைச் சுவாசிப்பதால் பலவிதமான கனவுகளுண்டாகும்.

821. ஞானப்பியாசிகள் ஆத்மாவிற்கும் மனதிற்கும் மத்தியில் யாதொன்றையும் வைத்துக்கொள்ளாத நிலைமையிலிருந்து கொள்ளவேண்டும்.

822. ஸ்திரீகளுக்குப் பதிவிரதா தர்மமிருப்பது போலப் புருஷர்களுக்கும் பத்தினி விரதா தர்மமிருக்கிறது.

823. மனமானது நித்தியமான ஆத்ம சொரூபத்தையடையாமல் அநித்யமான இந்திரிய விஷயங்களில் செல்லுவதைச் சூக்ஷம வியபிசாரம் என்று மஹான்கள் சொல்லுகிறார்கள்.

824. இந்திரியங்களுக்கும், மனதிற்கும், அறிவுக்கும், ஆத்மாவிற்கும் சமீபத்திலேயே அதிக தூரமிருக்கிறது.

825. அனுஷ்டானங்களுக்கும், சாஸ்திரங்களுக்கும், உபந்யாசங்களுக்கும், அனுபவத்திற்கும், ஒன்றுக்கொன்று தொடர்ந்த சம்பந்தமும் அதிக வித்யாஸங்களுமிருக்கின்றன.

826. இளஞ் சூடுள்ள வென்னீரில் ஸ்நானம் செய்து வருவதால் இந்திரிய ஜெயசாதனமும், குளிர்ந்த ஜலஸ்நானம் செய்து வருவதால் இந்திரியங்களுக்கு அடங்கியிருக்கும் சாதனமும் ஏற்படுகிறது.

827. வைதீக மதங்களிலுள்ள வெளிச்சின்னங்களுங்கூடக் கடைசியில் ஆத்மஞான சாதனமாக முடிகிறதென்று சில வைதீக மஹரிஷிகள் கூறியிருக்கிறார்கள்.

828. உண்மை ஞானத்திற்கும் உண்மையல்லாத ஞானத்திற்கும் இடையே சிலவுண்மைகளும் பலவுண்மைகளல்லாததும்

பலவுண்மையும் சிலவுண்மைகளல்லாததும் கொண்ட ஞானங்கள் இருக்கின்றன.

829. சரீரத்திற்குப் புறம்பான வெளி ஆசாரங்களும் சரீரத்தைப் பற்றியுள்ள ஆசாரங்களும் உள் சரீர ஆசாரங்களும் ஹிருதயசுத்திக்குப் பிரம்மஞானத்திற்கும்காரணமாகமுடிகிறது

830. வெளித்தோற்றங்கள் உள்தோற்றங்கள் இரண்டின் வாசனைத் தோற்றங்கள் இவைகளில்லாத காலம் நிருவிகல்ப ஸமாதி.

831. எந்தவிதத்திலாவது உலகம் கெட ஆரம்பிக்கும் போது தெய்வத்தின் ஆக்ஞையால் காலம், தேசம், சக்தி, மதம் இவைகளுக்கு ஏற்றவாறு பிரதிபலசக்திகளைக்கொண்டு நித்திய சூரியர்களும், ரிஷிகளும், அவதாரமாகிறார்கள்.

832. விஷ்ணு, பிரம்மா, சிவன், ருத்ரன், மஹேஸ்வரன், சதாசிவன், கணபதி, முருகன் இவர்களைக்காட்டிலும் வீர்யமுள்ள மஹரிஷிகள் சிலரிருக்கிறார்கள்.

833. உலக ஞானத்தை விருத்தி செய்துகொண்டு போகப் போகச் சலன ஞானத்திற்கு விருத்தியும், சாந்த ஞானத்திற்கு நாசமும் உண்டாகிறது.

834. அன்பு துவைதத்தையும், அறிவு அத்வைதத்தையும் நோக்கிச்செல்லுகிறது.

835. பிரபஞ்சத்திலுள்ள சகல பருவதங்களுக்கும் அதிபதிஸ்தானமாகிய பருவதத்தில் மனுஷ்யர்கள் சென்றுவரக்கூடாத ரகஸ்ய இடங்களில் பரத கண்டத்தின் சகலவித க்ஷேமங்களையும் உத்தேசித்துக் கடுமையான தபஸ் செய்துகொண்டு பல யோகிகள் தங்கியிருக்கிறார்கள்.

836. பிரபஞ்ச அநித்ய விஷயங்களில் இழுத்துவிடுகின்ற சாதனங்கள் எதுவாயிருந்தாலும் அடியோடு விட்டுவிடுவது பக்த யோக, ஞான, அப்பியாஸிகளுக்கு அழகு.

837. பேதஞானத்தின் சகுணசொரூபத்தையும், அபேத ஞானத்தின் நிர்க்குண சொரூபத்தையும், முறையே அப்பியாசித்து அனுபவத்திலறிய ஆரம்பித்தவர்களுக்கு அந்தர்முக ஞானப்பிரதிபந்தங்கள் யாதொன்றும் வருவதில்லை.

838. தாதுபுஷ்டி, காமவிர்த்தி இரண்டுக்குமாக ஸ்நானம் செய்வது தாமஸம்.

839. சரீர ஆரோக்யம், சரீரசுத்தி இரண்டுக்குமாக ஸ்நானம் செய்வது இராஜஸம்.

840. நாடிசுத்தி, காயசித்தி, சித்தசுத்தி, இம்மூன்றுக்குமாக ஸ்நானம் செய்வது சாத்வீகம்.

841. இராஜஸ, தாமஸகுண சம்பந்தப்பட்ட சங்கல்பம், அனுஷ்டானம், கொள்கை, மதம், வார்த்தை, சமம், சாந்தம், உதாரம், பார்வை, கேள்வி, ஆதாரம், தைர்யம், கர்மம், பக்தி, ஞானம், யோகம், ஆசை, அன்பு, அறிவு, அடக்கம், ஆராய்ச்சி, சாஸ்திரம், தெய்வம், குரு, தேசம், வாதம், பிரயாணம், நடை, உடை, பாவனை, பிரசாரம், உபந்யாசம், நிதானம், தந்திரம், காக்ஷி, ஆலயம், தரிசனம், சேர்க்கை, உண்மை, உறுதி, ஆராதனை, ஸ்நானம், இவைகளை விலக்கிவிட்டுச் சுத்த சாத்வீககுணமாய் அனுஷ்டித்துவரச் சீக்கிரத்தில் பிரஹ்ம ஞானம பிரசன்னமாகிறது.

842. பஞ்ச கோசங்கள், மூன்று சரீரங்கள், மூன்றவஸ்தைகள், இவைகளை மனோ விருத்தியால் கடந்து அப்பாலுள்ள சூன்ய தரிசனமாத்திரத்தால் திருப்தியடைந்தவன் மனுஷ்யர்கள் அணுகமுடியாத சந்திர மண்டலத்தின் பின் பாகத்தை அடைகிறான்.

843. கிரியாநிஷ்டை, யோகநிஷ்டை, ஞானநிஷ்டை, பிரஹ்மநிஷ்டை, இந்நான்கும் முறையே படிப்படியான தத்துவங்கள்.

844. சித்தம், மனம், பிராணன், இம் மூன்றும் அடங்கக் கூடிய ஓர் அப்பியாஸத்தையே சித்தர்மதம் கூறுகிறது.

845. பிரபஞ்சத்திலுள்ள பிரஜைகளுக்குப் பிரஹ்ம ஞானத்தைப் போதிப்பதைக் காட்டிலும் சித்தசுத்தியின் சாதனங்களைப் போதிப்பது சிரேஷ்டம்.

846. இகலோக வாழ்வு, பரலோக வாழ்வு என்ற இரண்டுக்கும் தனித்திருத்தல் போன்ற உத்கிருஷ்டமான சாதனம் வேறொன்றில்லை.

847. பற்றுதலும் பற்றை விடுவதுமான இரண்டையும் விட்டவர்கள் ஞானிகள்.

848. நல்லவனை நல்லவனென்று சொல்லலாம். கெட்டவனைக் கெட்டவனென்று சொல்வது கூடாது.

849. ஆசை குறையக்குறைய ஆத்ம சக்தி வளருகிறது.

850. இந்திரியங்களின் வெளி இச்சைகள் தானேவிலக ஆரம்பிக்கும்போது சித்தசுத்தி வந்துவிட்டதென்று தெரிந்து கொள்ளவேண்டும்.

851. ஹிருதயம் சுத்தமாக ஆகும்போது திடீர் திடீரென்று பற்பல ஆச்சரியமான தோற்றங்களும், பலவித ரகஸ்யச் செய்கைகளும், தெரியாத வேதசாஸ்திர வுண்மைகளும் தோற்ற ஆரம்பிக்கும்.

852. எந்த ஹிருதயத்தை பிரஹ்மசக்தி தேடிக்கொண்டு வருகிறதோ அந்த ஹிருதயத்தில் உலகமும் அதன் தோற்றங்களும் அனுவபங்களும் வாஸ்தவத்தி லில்லையென்று மாறுபடாதபடி தோற்றும்.

853. சடகோபர் மவுனத்திலும், திருமூலர் நிஷ்டையிலும், புத்தர் ஞானத்திலும், இராமானுஜர் காருண்யத்திலும், திருஞானசம்பந்தர் தீவிரத்திலும், சங்கரர் பிரசாரத்திலும், வேதாந்ததேசிகர் வினய புத்தியிலும், மத்வர் வார்த்தையிலும், வித்யாரண்யர் பாண்டித்தியத்திலும், ஜெயதேவர் அடக்கத்திலும், மாணிக்கவாசகர் மாதுர்யத்திலும், இந்தக் கலியுக காலங்களில் ஆச்சரியப்படத்தகுந்தவர்கள்.

854. அந்தரங்கத்தில் ஒருவரையும் நம்பாமல் பகிரங்கத்தில் எல்லோரையும் நம்புவதுபோலக் காண்பித்துக் கொண்டு ஞானயோகிகள் பிரபஞ்சத்தில் சஞ்சரிப்பார்கள்.

855. அறிவில் எவ்வளவு ஞானனுபவம் உதயமாகிறதோ அவ்வளவு மனதிற்குத் தோன்றமாட்டாது. மனதிற்குத் தோன்றுகிற அளவு வாக்கால் வசனிக்க முடியாது. வாக்கால் வசனிக்கிறவரை எழுத்தால் எழுதமுடியாது. எழுதுகிறவரை அனுஷ்டிக்க முடியாது.

856. குற்றவாளிகளுக்குத் தக்க தண்டனையை உண்மையாக நீதிபரிபாலனம் செய்துவருகிற அரசர்கள் விதித்துவிட்டால் ஈஸ்வரப்பிரதி நிதியான யமதர்ம ராஜனது தண்டனை அவர்களுக்கு உண்டாகிறதில்லை.

857. ஆதியில்லாத வஸ்துவைப்பற்றிக் கேள்விகள் கேட்பது வேதசம்மதமுமல்ல மஹாத்மாக்களின் முறையுமல்ல.

858. எந்த விதங்களினாலும் தீர்க்கமுடியாத மஹாபாபங்களைச்செய்தவர்கள் அப்பாபங்களினின்றும் விலக வேண்டுமென்றெண்ணினால் பரமாத்மத்தியானத்துடன் பச்சாத்தாபத்தோடு யதார்த்தமான பிராயோபப் பிரவேஸமாவது அக்னிப்பிரவேஸமாவது செய்துவிடவேண்டும்.

859. பொய்கலப்பில்லாத மெய்யையும், துக்கங்கலப்பில்லாத சுகத்தையும், நஷ்டங்கலப்பில்லாத லாபத்தையும், அசைவு கலப்பில்லாத் மனத்தையும், அறிவு கலப்பில்லாத அன்பையும், உலகத்தில் ஒருவரும் எதிர் பார்க்கமுடியாது.

860. பத்து இந்திரியங்களும் மனதும் எப்போது பரமாத்மாவை நோக்கிச்செல்ல ஆரம்பிக்கிறதோ அப்போது பாப சமஸ்காரங்கள் மிகவும் குறைவுபட்டுத் தேய்ந்து ஓய்ந்திருக்கிறதென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

861. உவமானப்பிரமாணம், அனுமானப்பிரமாணம், வேதப்பிரமாணம், தெய்வப்பிரமாணம், பிரத்தியக்ஷப்பிரமாணம், இவைகளெல்லாவற்றிலும் அனுபவப்பிரமாணமே வாஸ்தவமானது.

862. உலகத்திலுள்ள ஒவ்வொரு மதத்திலும் புகுந்து அதன்தன் உண்மையை அறிவதைக்காட்டிலும் நம்பிக்கையுள்ள ஓர் மதத்தின் உண்மையை உள்ளவாறு அறிந்துகொள்வதே விசேஷம்.

863. உண்மைகள் தெரிந்துகொள்ளாத மதத்தைப்பற்றி குற்றமாவது குணமாவது கூறுவது கூடாது.

864. எந்த மந்திரங்களையும் சுவானுபவம் வாய்ந்துள்ள ஆசாரியரிடம் முறையே உபதேசம் பெற்றுக்கொண்டாலன்றிப் பலிதமாகிறதில்லை.

865 பொய்யைப் பொய்யாலும், மெய்யை மெய்யாலும், இரண்டுங்கலந்ததை இரண்டுங்கலந்ததாலும் வெல்ல முயற்சிக்க வேண்டும்.

866. துலாம், மகரம், மீனம், இந்த லக்கினங்களில் பிறந்து பிரஹஸ்பதி, சுக்கிரன், புதன், செவ்வாய் இந்த நால்வரும் ஒருவருக்கொருவர் பார்த்துக்கொண்டிருக்கிற கிரகசாரநிலைமையுடையவர்களுக்கு மறுபிறப்பில்லாத தன்மையும், குருஸ்தானமும், பிரயத்தனமில்லாமலே வலுவில் ஞானோதயமும் வாய்க்கிறதென்று மச்சேந்திர நாதர் கூறுகிறார்.

867. ஓம் என்னும் பிரணவத்தை மெதுவாகப் பதினாறு தரம் உச்சரிக்கும்வரை வலது மூக்கால் பிராணவாயுவை இழுத்து அறுபத்துநான்கு தரம் ஜெபிக்கும்வரை அடக்கி, எட்டுத்தர சொல்லுகிறவரை இடது மூக்கால் விடுவதைத்தினந்தோறும், காலையில் பதினாறும், மாலையில் முப்பத்திரண்டுமாக அப்பியாசித்துக்கொண்டுவர மூன்று வருஷத்தில் ஸ்தூல சரீரத்திலுள்ள எழுபத்திரண்டாயிரம் நாடிகளும் பரிசுத்தமாய்விடுகின்றன. மரண பரியந்தம் எந்த வியாதியும் அணுகுவதில்லை.

868. இச்சையும், பந்தமும், செல்வமும், செறுக்கும், கோபமும், கொரோமும், ஒரே இடத்தில் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாது குடிகொண்டிருக்கின்றன.

869. முக்தியில் மயங்குபவர்களுக்குச் சித்தியும், சித்தியில் மயங்குபவர்களுக்கு முக்தியும், விரோதத்தை விளைவிக்கின்றன.

870. பிரம்மா முதல் சகல ஜீவப்பிராணிகளிடத்திலும் உயர்வு, தாழ்வு, தோற்றாத மனோநிலைமை வாய்ந்த மஹாபாக்கிய சாலிகளிடம் தெய்வீகசக்தி தானே குடிகொள்ளுகிறது.

871. சர்வ சங்க பரித்தியாகிகளான துறவிகள் கிரஹஸ்தர்களிடம் ஆழ்ந்திப்பழகுவது பெரியகுற்றம்.

872. மனோ நாசம், பஞ்சகோச நாசம், மூன்றவஸ்தைகளின் நாசம், மூன்று சரீர நாசம், சங்கல்ப நாசம் இவைகளில் ஏதாவது ஒன்று சித்தித்தால், மற்றெல்லாந்தானே சித்திக்கின்றன.

873. பிறப்பிறப்பு வேண்டாதவர்கள், துரும்புமுதல்,ஸ்வர்ணம்வரையுள்ள பதார்த்தங்களில் இன்பமிருக்கிறதென்று நம்பிவிடக்கூடாது.

874. எல்லாந்தெரிந்து ஒன்று மட்டுந்தெரியவில்லையானல் அது பிரஹ்மமென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

875. பிரபஞ்ச வஸ்துக்களில் சிறிது இன்பமாகத்தோற்றுமானல், ஜன்ம மரண விருத்திக்கு ஏதுவான சக்தியும், துன்பமாகத் தோற்றுமானல், நிவிர்த்திக்கு ஏதுவான சக்தியும் வளருகிறது.

876. ஆத்மசமரஸம், அனாத்மசமரஸம், என்ற இரண்டில் ஆத்மசமரஸமே மஹரிஷிகளால் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

877. விசாலபுத்தி யில்லாதவர்களான க்ஷேமதர்சிகள் தன்னையறிய விரும்புகிறார்கள்.

878. உலக சிருஷ்டியின் உண்மையைத் தெரிந்துகொண்டவன் ஒரு சாஸ்திரமும் கற்க வேண்டியதில்லை.

879. ரேதஸ் என்ற சுக்கிலமே மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் மோக்ஷத்திற்குக் காரணமாகிறது.

880. ஆசைப்படத்தக்க விஷயங்களுள் எதை எவ்ன்தவிலக்கிக்கொள்ளுகிறானே அவன் பூர்ண சுகத்தை அடைகிறான்.

881. மனுஷ உலகத்திலுள்ள விஷயசுகமும், தேவலோகத்திலுள்ள பெரிய சுகமும், சத்தியலோகமும், வைகுண்டம், கைலாயம் முதலிய உலகங்களிலுள்ள அபார சுகங்களும் ஆசையைவிட்டதினலுண்டாகும் சுகத்தில் ஆயிரத்திலொருபங்குகூட ஆகமாட்டாதென்று உமாசங்கரர் கூறுகிறார்.

882. வெளியிலுண்டாகிற மிருத்யுவைக்காட்டிலும் மனத்திலுண்டாகிற கோபமென்னும் மிருத்யுவே பெரியது.

883. உலகத்திலுண்டாகிற ஆசைகளையெல்லாம் வெளிக்குவராமல் அடக்கிக்கொள்ளுகிறபோது தானாக விளங்குகிற ஆத்மப்பிரகாசமானது உலகத்திலேயே தெளிவாக விளங்கும்.

884. முன்பிறப்புகளிலுள்ள சரீரங்களாற் செய்யப்பட்ட கர்மமானது சுபமோ, அசுபமோ, அவற்றின் பலன்கள் சூரனை

லும், மூடனாலும், அறிவுள்ளவனாலும், பயந்தவனாலும் செய்தவினை வந்தடைகின்றன.

885. எல்லாவற்றையும், மீறிச்செல்கிற காலசக்தி அதிசீக்கிரம் விரைந்து செல்கிறபடியால் வெகு சீக்கிரத்திற் செய்ய வேண்டியதைச் செய்துகொள்ளவேண்டும்.

886. காலசக்தி திருமூர்த்திகளையுந் தாண்டிச்செல்லுகிறது.

887. விகாரமுள்ள மனத்தையுடைய ஜீவர்கள் விகாரமில்லாத பரமாத்மாவை வெகுகாலம் மறைத்துவைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

888. தனக்கருகிலுள்ள தானான ஆத்ம நாயகனை அறியாத ஜீவநாயகிகள் உலக நாயகர்களை நாடிவிடுகிறார்கள்.

889. எமனானவன் கர்மபலன்களைத் தேடுகிறவனும், வேறிடத்திற்குச்சென்ற மனமுள்ளவர்களை எடுத்துக்கொண்டுபோகிறவனுமாயிருக்கிறான்.

890. அதிக சுந்தரமும் யௌவனமும் உள்ள ஸ்திரீகளைக் கண்டு எவன் மனது ஒன்றும் நினையாமலிருக்கிறதோ அவன் சமதமாதி சாதனங்களை அனுஷ்டிக்கவேண்டியதில்லை.

• 891. விட்ட விஷயங்களை மீண்டும் வராமற்செய்து கொண்டவன் விதியையும் வெல்லும் சாமர்த்தியமுடையவன்.

892. சுவாதீனமுள்ள சந்நியாசிகளிடம் ஸ்வாதீனமில்லாத துறவிகள் பழகமாட்டார்கள்.

893. நேரிற்பார்த்துப் பழகாதவனைப்பற்றி யாரார் எந்த விதமான நன்மை தீமையுள்ள குணங்களைச் சொன்னபோதிலும் ஒன்றையும் நிச்சயஞ் செய்துவிடக்கூடாது.

894. தானே நேரே வெளியிற்கண்ட விஷயத்தையும், பிறர் கூறக்கேட்டதையும், அன்னியர்களிடம் கூறுவது குற்றம்.

895. ஆரண்யங்களிலுள்ள மரத்தடிகளில் தங்கியிருப்பது பிசகு.

896. எந்தப் பிராணிகளுக்கும் யாதொரு முயற்சியும் பிரயாசையுமின்றி காமஇச்சை, நித்திரை, பசி, இவைகளுண்டாவ

தைப்போல் எவனுக்குப் பரிசுத்தமார்க்கப்பிரவிர்த்தி, ஞான இச்சை, பற்றற்ற நினைவு இவைகளுண்டாகுமானால் தெய்வ அம்ஸபூத யோகப் பிரஷ்டனென்றறியவேண்டும்.

897. கண்ணை விரும்புகிறவன் ஞானத்தையும், தவம் வேண்டிய்வன் சத்தியத்தையும், சுகம் வேண்டுபவன் தியாகத்தையும், அடையவேண்டும்.

898. துக்கம் வேண்டாதவன் ஆசையையும், கோபம் வேண்டாதவன் லோபத்தையும். ஆசையை விரும்பாதவன் அறியாமையையும் விட்டுவிட வேண்டும்.

899. ஆசையற்றவனிடத்திலும் பொருளில்லாதவனிடத்திலும் மிருத்யுதேவதையின் பலம் செல்லுகிறதில்லை. தீ, திருடர் பிரவேசிக்கிறதில்லை.

900. உலகம் முழுவதையும் அரசாக்ஷி செய்கிற சக்கிரவர்த்தியையும் ஏழையாகிய தரித்திரனையும், இரண்டு தராசில் தூக்கிப்பார்த்தால் ஏழைக்குள்ள சுதந்திரமும் சுகமும் அரசனுக்கில்லை.

901. உலகத்திலுள்ள எல்லாக்காமங்களின் வஸ்துக்களை அடைபவனைவிட விடுபவன் சிறந்த விசேஷமுடையவன்.

902. ஆசைப்படத்தக்க உலகப்பொருள்கள், தொழில் இவைகளின் எல்லையை அடைந்தவன் இதுவரை ஒருவனுமில்லை.

903. அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயம், சதானந்தமயம், மஹதத்துவம், இவற்றின் முடிவிலிருந்து பிராணிகளுக்குக் காமமுண்டாகிறது.

704. ஆசாரியர் சிஷ்யனுக்கு நேரே பிரஹ்மத்தைக்காட்ட முடியாது.

905. உலக மயக்க விழிப்பில் வேதாந்தம் பேசுபவன் சுத்த பாமரன்.

906. ஜாக்கிர, சொப்பன, சுழுப்திகளைத் தாண்டியவனுக்கு வேதாந்தம் விளங்கும்.

907. மனமுதித்தால் சகல விவகாரங்களுமுண்டாகின்றன.

908. மித்தையான பந்தத்தைக்கெடுக்கச் சத்தியமான மோக்ஷம் வேண்டியதில்லை.

909. லோகாயதர்கள் முதல் சாங்கியர்கள்வரை ஜீவமயக்க முடையவர்கள்.

910. திருஞசகமத முதல் யோக மதம்வரை ஈஸ்வர மயக் கமுடையவர்கள்.

911. ஜாக்கிரம் முதல் மோக்ஷம்வரை ஜீவகல்பிதம்.

912. உண்மையில்லாத மதங்கள் நாளடைவில் நசித்துவிடு கின்றன.

913. ஒரு காலத்திலுற்பத்தியாகிற மதம் மற்ரெரு காலத் தில் அழிகிறது.

914. வைதீகமான பெரிய மதத்தை லெளகீகமான சிறிய மதம் ஏளனம் செய்வது கலியில் சகசமாயிருக்கும்.

915. ஒரு காலத்திலும் உண்டாகாமல் விளங்கிக்கொண்டி ருப்பது கடவுள் மதம்.

916. உண்மையில்லாத தென்று ஒரு மதத்தையும் எண்ணி விடக்கூடாது.

917. சில உண்மையுள்ளன, சிற்சில உண்மைகளைக்கொண் டன, பல உண்மைகொண்டன, பல பல உண்மைகளைத்தாங்கி யிருப்பன, நிறைந்த உண்மைகளையுடையதுமான உலகமதங்க ளெல்லாம் விளங்குகின்றன.

918. கடவுளை அறியவேண்டுபவன் ஒரு மதத்திலும் கட் டுப்பட்டிருக்கக்கூடாது.

919. யோகம் முடிந்தவன் மறு ஜென்மத்திலும் முடிந்த ஞானி அதே ஜென்மத்திலும் பிறவாமுக்தி பெறுகிருன்.

920. இருந்தயிடத்திலிருந்துகொண்டே உலக விஷயங்கள் முழுமையும் அறிந்துகொள்ளக்கூடிய மனேதிருஷ்டியைக் கொண் டவர்கள் மனே சலனத்தையும் அஞ்ஞானத்தையும் அடைகிருர் கள்.

921. போக்கு வரவுள்ள சுவாதீன யோகியானவன் ஆகாய கமனத்தாலன்றிப் பூமியால் நடந்து சஞ்சரித்தால் யோகசக்தி குறைகிறது.

922. குணத்தையும், தொழிலையுங்கண்டு களிப்படைகிற ஜனங்கள் ஞானத்தைக்கண்டு ஆச்சரியப்படுவதில்லை.

923. விதிப்படியுள்ள பக்தியோக கர்ம யோகங்களுக்கு இடமில்லாத புத்தமதத்தில் ஞானயோகத்திற்கு மட்டும் இடமிருக்கிறது.

924. பிரபஞ்சம் அநித்யமென்றறியாமலுண்டாகிய வைராக்கியம் நிலைத்து நிற்கிறதில்லை.

925. தன்னிடத்திலிருந்து நீக்கப்பட்ட ஒருவனை எந்தக் காரணங்களைக்கொண்டும் மீண்டும் சேர்த்துக்கொள்வதால் அபமிருத்யுதோஷம் உண்டாகிறது.

926. எப்போதும் இஷ்டம்போல் சஞ்சரிக்கிறவனும் பாய் முதலிய விரிப்புகளில்லாத நிலத்திற்படுப்பவனும், தன் கையைத் தலையணையாகக்கொண்டவனும், அடக்கமுள்ளவனுமான ஏழை மனிதனைத் தேவர்கள் விசேஷமாகக் கொண்டாடுகிறார்கள்.

927. சாமர்த்தியவானான புருஷனும் நம்பிக்கை கொண்டு முயற்சியுடன் நன்றாக எத்தொழிலைச் செய்தபோதிலும், விதியாற் கிடைக்கவேண்டியவைகளையன்றி வேறொன்றுங்கிடைக்கமாட்டாது.

928. உலகத்திலுள்ள அநித்திய வஸ்துக்களின் சேர்க்கையும் காலாந்தரத்தில் மோக்ஷ சாதனமாக முடிகிறது.

929. ஞானமார்க்கத்தை உபதேசிப்பதைவிடக் காண்பிப்பது சிரேஷ்டம்.

930. பல பேர்களுடனிருப்பதாற் கலகமும், இருவருடனிருப்பதால் பேச்சும் அவஸ்யமாயுண்டாகுமாதலால், தபசியும், யோகியும், ஞானியும், புத்தியுள்ளவனும், தனிமையாகச் சஞ்சரிக்கவேண்டும்.

931. ஆசையும் அன்பும் ஒருவனிடத்திலும் ஒரே காலத்திலிருக்க முடியாது.

932. சுபாவத்தைப்பற்றி யுண்டாகிற முயற்சிகள் யாவும் சுதந்திரத்திற்கே கொண்டுபோய்விடுகின்றன.

933. முயற்சியால் உண்டாகக்கூடிய பிரவிர்த்திகள் யாவும் சுபாவத்தைப்பற்றின அல்ல.

934. யோக மார்க்கத்தாற் கிடைக்கிற புண்ணிய லோகங்களைக் காட்டிலும் தர்ம மார்க்கத்தாற் கிடைக்கிற லோகம் விசேஷமானது.

935. நம்மைக்குறித்து யாராவது ஓர் விஷயத்தைக்கூறினால் அலக்ஷியஞ்செய்யவா லக்ஷியஞ்செய்யவா கூடாது. நீண்ட ஆலோசனைசெய்து நிச்சயிக்கவேண்டும்.

936. மனது பரிசுத்தமாவதற்குவேண்டிய தர்மங்கள் எதுவாயிருந்தாலும் ஜாதி பேதமின்றி யாதொரு வரம்புமின்றி எவரும் அனுஷ்டிக்கலாம்.

937. உலகப் பொருள்களின் உதவியைக்கொண்டு உலகாதீத வஸ்துவை அடைய வேண்டியிருப்பதால் உலகவஸ்துக்களையெல்லாம் பரமாத்மாவாகப் பார்க்கவேண்டும்.

938. ஓர் பெண்ணானவள் வீட்டிலுள்ளவர்களுக்குத் தெரியாமல் அதிதிகளுக்குப் போஜனஞ் செய்துவைக்க விருப்பங்கொண்டு நெல்லைக் குத்தும்போது கைகளிலுள்ள வளையல்கள் பிறரறியும்படி ஓசையுண்டாயின; அவள்தானே வளையல்களை உடைத்துவிட்டு ஒன்றைமட்டுங் கையில் வைத்துக்கொள்வது போல, மனுஷ தத்துவங்களின் ஓசை உண்டாகுங் காரணங்களை தெரிந்துகொண்டு விலகிக் கொண்டவர்களது ஓசை உள்ளடக்கமாகவே இருக்கும்.

939. எவனுக்குச் சரீரம், பிராணன், மனம், இவைகளிருந்தும் இல்லாதிருக்கிறதோ, கண்களிருந்தும் பார்க்கிறதில்லையோ, காதுகளிருந்தும் கேட்பதில்லையோ, நாவிருந்தும் ருசி அறிவதில்லையோ, வாக்கு இருந்தும் பேசாதிருக்கிறதோ, நடந்தும், புசித்தும், தூங்கியும், நடவாதவனும், புசியாதவனும், தூங்காதவனுமாயிருக்கிறானோ அவன் ஆரூடன்.

940. வியாதியினுலுண்டாகிற வரக்ஷியுடையவன் தண்ணீரால் தாகம் தீராததுபோல் பேராசையுடையவன், இந்திரபதவி கிடைத்தாலும் திருப்தி அடைகிறதில்லை.

941. உண்ணுதிருப்பது, பேசாதிருப்பது, பாராதிருப்பது, தொடாமலிருப்பது, இவைகளால் மனிதனுக்குச் சிரேயஸ் உண்டாகிறது.

942. பிரத்யகாத்மாவையும் பிரஹ்மத்தையும் ஒன்ருக்கியது ஐக்கியம்.

943. ஜீவாத்ம பரமாத்ம சமீபவாஸமே உபவாஸம்.

944. ஜென்ம வியாதி தீரவேண்டுமாளுல் வீட்டை விட்டு இறங்கலாகாது.

945. ஜீவனையும் மனதையும் ஒன்று சேர்ப்பதாலுண்டாகுவது சித்தாந்தம்.

946. ஜீவனைப்பிரத்திய காத்மாவில் சேர்ப்பதாலுண்டாவது வேதாந்தம்.

947. வேதத்தை நிந்திப்பவன், பிரயோஜனமில்லாத யுக்தி பேசுகிறவன் நாஸ்திகன், யாவற்றிலுஞ் சந்தேகமுள்ளவன் மூர்க்கன், தன்னைப்பண்டிதனென்று நினைப்பவன், இவர்கள் மறு ஜென்மத்தில் குள்ளநரியாய்ப் பிறக்கிருர்கள்.

948. ஞானுனுபவம் வாய்ந்து அந்தர்முக திருஷ்டியிலிருப்பவர்களுக்குச் சாஸ்திரார்த்தங்களும் வேதவாக்கியங்களும் பெரிய பாரமாகத் தோற்றுகின்றன.

949. முன்ஜென்மங்களில் செய்த நல்வினையும் தீவினையும் பின் ஜென்மத்தில் அததற்குறிய பலன்களைக்கொடுப்பது நிச்சயமாயிருக்கிறபடியால், அவஸ்யம் தர்மகாரியங்களையே செய்துவர வேண்டும்.

950. தான்யங்களுள் பதரும், பக்ஷிகளுக்குள் கொசுவும், போன்றிருக்கப்பட்டவர்கள் சுகத்திற்கு காரணம் தர்மமென்று தெரிந்துகொள்வதில்லை.

951. ஆசையற்று மோக்ஷத்தை உத்தேசித்துச் செய்யப் படாத புண்ணியகருமங்கள் பலஜென்மங்களைக் கொடுத்துவிடு கின்றன.

952. சன்மானம், அவமானம், மானம், கஷ்டம், நஷ்டம், லாபம், சுபம், ஆபத்து, சம்பத்து, பிறப்பு, குலம், இவைகள் தான்செய்த கருமங்களாலுண்டாகின்றன.

953 ஆகாயத்திலுள்ள பறவைகளின் அடிச்சுவடும், ஜலங் களிலுள்ள மீன்களின் பாதக்குறியும், எவ்விதங்காணப்படுவதில் லையோ, அவ்விதமே, பிரம்மஞானத்தை அடைந்தவர்களது மார் க்கங்களையுங் காணமுடிவதில்லை.

954. ஆகாயத்தில் ஒரு பூதமும் வாயுவில் இரண்டு பூத மும், அக்கினியில் மூன்று பூதமும், ஜலத்தில் நான்கு பூதமும், பூமியில் ஐந்து பூதமும், சேர்ந்திருக்கின்றன.

955. பிரஹ்மத்தை யன்றி மற்றத் தத்துவங்களை விசாரித் தறிந்தவன் தத்துவ ஞானியேயன்றிப் பிரம்மஞானியல்ல.

956. எந்த மனிதன் எந்தக்கர்மத்தை எந்த விதமாய்ச் செய்திருக்கிறானோ அந்தக்கர்மமானது சூக்ஷ்மமாக அந்த மனி தனிடம் குடிகொண்டிருக்கும்; அவன் ஓடினால் ஓடும், நின்றால் நிற்கும், நடந்தால் நடக்கும், தூங்கினால் தூங்கும், உட்கார்ந்தால் உட்காரும், பேசினால் பேசும், வேலைசெய்தால் செய்யும், சாப் பிட்டால் சாப்பிடும், முழுகினால் முழுகும், நீந்தினால் நீந்தும், தபஞ்செய்தால் தானுஞ் செய்யும், உருண்டால் உருளும், மறந் தால் மறக்கும், பிறந்தால் பிறக்கும், இறந்தால் இறக்கும், வந்தால் வரும், ஏறினால் ஏறும், இறங்கினால் இறங்கும், மவுன மானால் மவுனமாகும்.

957. மனஞ்செல்லுகிறவரை கருமமுஞ்செல்லும் மனஞ் செல்லாதவிடத்தில் கருமஞ் செல்லமுடியாது.

958. ஐந்து பூதங்களில் ஒன்றைவிட்டு ஒன்று ஓரிடத்தில் நிலை பெற்றிராது.

959. சரீரத்தை ரக்ஷித்து வருகிற அக்கினியானது சிரசில் குடிகொண்டிருக்கிறது.

960. முயற்சி, தொழில், பலம், இம்மூன்றும் ஒன்று சேர்ந்ததே உதானவாயு என்று ஜடதத்துவ நிபுணர்கள் சொல்லு கிறார்கள்.

961. பாகமான ஆகாரமிருக்குமிடமாகிய நாபியின் கீழ்ப் பாகத்திலும், பாகமாகாத ஆகாரமிருக்குமிடமாகிய நாபியின் மேற்பாகத்திலும், அக்னியோடு கூடிய பிராணவாயு சஞ்சரிக் கிறது.

962. பிரஹ்மானுபவத்தினின்றிறங்கும் போதே மன தும் மாயையுங்கூட இறங்குகிறது.

963. பார்ப்பதெல்லாம் பரமாக எவனுக்குத் தோற்றுகி றதோ அவன் மனுஷ்ய தேவன்.

964. நினைக்கிற மனிதன் நினையாத மனிதன் இருவரைக் காண்பவன் நிகன்ம யோகி.

965. சங்கற்பத்தை எவன் தானகப்பாவிக்கிறானோ அவன் பரமபாக்கியன்.

966. மரம், செடி, கொடி, புல், பூண்டு, முதலிய ஸ்தாவர ங்களுக்கும் ஐந்து பூதங்களும் சப்த ஸ்பரிச ரூபரஸ கந்தங்க ளும் மனமும் ஜீவனும் சுகதுக்கங்களும் இருக்கின்றன.

967. பிராணிகளின் சரீரங்களிலுள்ள பஞ்ச பூதங்களில் ஜலம், அக்கினி, காற்று, இம்மூன்றும் எப்போதும் விழித்துக் கொண்டிருக்கின்றன. பூமியும் ஆகாயமும் அசைவற்று உறங்கு கின்றன.

968. காலமிருத்யுவும் அந்தக்கரணத்தின் கர்த்தாவும் ஒன்று சேரும்போது காலனழிகிறான்.

969. காலமென்று சொல்லப்படுகிற மிருத்யுதேவதையா னது உருவந்தோற்றாமல் பிரம்மத்தைமட்டும் விட்டு மற்றெல் லோரையுஞ் சுற்றிநிற்கின்றன.

970. காற்றும் ஜலமும் ஒன்று சேரும்போது அக்கினி யும், காற்றும் அக்கினியும் ஒன்று சேரும்போது பூமியும் உண் டாகிறது.

971. ஆகாயத்தின் எல்லையைத் தேவர்களும் அறிய முடிய வில்லை யென்கிருர்கள்.

972. பரமாத்மாவின் ஆயிரத்திலோர்பங்கு சக்தியுடையது மனம்.

973. சூரியனுடைய ஒளி செல்லுகிற இடத்திற்குமேலும் சூர்ய சந்திரர்கள் காணப்படாத இடத்திற்குக்கீழும் தாமாக விளங்குகிற அளவற்ற பிரகாசமுடைய சுத்த தேவர்களிருக்கிருர்கள்.

974. பிரம்ம நிஷ்டையின் தன்மையினின்று நழுவியவனைப் பிராம்மணனென்று வேதம் சொல்லவில்லை,

975. துரிய அனுபவிக்கு மூன்றவஸ்தை வந்தாலும் பற்ருது.

976. எது எது இந்திரியங்களுக்கும் மனதிற்கும் புலப்படுகின்றனவோ அவைகள் மாயாஜாலங்களென்றறிந்து கொள்ள வேண்டும்.

977. வேதத்திற் கூறப்பட்டிருக்கிற உத்தம சமஸ்காரங்களைப் பெற்றவர்களும், ஒழுக்கமானவர்களும், யோகத்தில் சிரேஷ்டர்களும், தத் சொரூபத்தில் நிலைத்தவர்களுமானவர்கள் பின் கிருதயுகத்தில் லோகபாவனர்களான ரிஷிகளாய் வருகிருர்கள்.

978. பிரம்மத்தை அனுபவத்தில் அறிந்தவர்களைப் பிராமணர்களென்று அடிக்கடி வேதம் கூறியிருக்கிறது,

979. முக்குணங்களோடு கூடிய ஜீவனனது க்ஷேத்ரக்ஞனென்றும், முக்குணங்களை விட்ட ஆத்மா பரமாத்மாவென்றும் அறிந்துகொள்ளவேண்டும்.

980. லகுவான ஆகாரமுள்ளவன் பரிசுத்தமான புத்தியுள்ளவன், இரவுகளின் கடைசியிலும் முதலிலும் சமாதியிலிருப்பவன் இவர்கள் சீக்கிரம் பரமாத்மாவை அறிகிருர்கள்.

981. பிரம்மமாகிய ஸ்ரீமந் நாராயண தேவரிடமிருந்து க்ஷேத்ரக்ஞனுகிய பிரம்ம தேவருண்டாகிச் சங்கல்ப சிருஷ்டிகளைச் செய்கிருர்.

982. கிருத யுகத்தின் ஆதியில் எல்லோரும் பிரம்ம நிஷ்டர்களான பிராம்மணர்களாகவே இருந்தார்கள். பிராம்மணரல்லாதவர்கள் ஒருவராவது இல்லை.

983. காலக்கிரமத்தில் பிராம்மணர்களே பிராம்மணரல்லாதவர்களாய் விட்டார்கள்.

984. பரலோகத்தின் ரகஸ்யம் தெரியாதவர்களும் உறுதியும் உண்மையுமான ஆஸ்திக புத்தியில்லாதவர்களும் வேதத்திற் கூறியவைகளை யெல்லாம் அங்கீகரிக்க முடியாத ஸ்திதியிலிருக்கிறார்கள்.

985. வேதத்திற்கூட நிச்சயமான மார்க்கம் கூறப்படவில்லை.

986 பரவித்தை அபரவித்தை என்றிரண்டில் பரவித்தையொன்றே பிரம்மத்தை அடைகிற மார்க்கம்.

987. மனதற்ற இடத்தில் கடவுள் பிரகாசிக்கிறார். பிரசன்னமாகிறார்.

988. வேதம், ஆகமம், இதிகாசம், புராணம், ஸ்மிருதி, கலைக்ஞானங்கள், வேதாங்கம், சாஸ்திரம், தத்துவசாஸ்திரம், மந்திரம், இவைகளெல்லாம் அபரவித்தைகள்.

989. சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற உலகத்தைப் பிரம்ம ரூபமென்று அனுபவித்து அறிந்தவர்களாகிய பிராம்மணர்களே, கர்மத்தின் நீண்டகால வேற்றுமைகளினால் க்ஷத்ரிய, வைசிய சூத்திரர்களாய் விட்டார்கள்.

990. உலக ஆசை குடிகொண்டவனுக்கும் ஞானிக்கும் ஜனன மரண ஞாபகமேயில்லை.

991. சொல்லைவிட்டுச் செய்கையில் ஸ்ரீராம பிரானையும், செய்கையைவிட்டுச் சொல்லில் கண்ணபிரானையும் நம்பவேண்டும்

992. ஜீவனை உபாஸிக்கிறவன் அறிவாளியென யமனால் பூஜிக்கப்படுகிறான்.

993. நினைப்பு உதயமாகிய இடத்தில் நிற்காமல் அப்பால் போகிறவன் நித்திய சாது.

994. வருகிற பிராணனையும் போகிற அபானனையும் எவன் பார்த்துக்கொண்டிருக்கிருனே அவன் காலாஷ்டக யோகி.

995. இந்திரியங்களுக்கு மட்டும் புலப்படுகிறவைகள் வியக்தமென்றும், மனத்தின் யூகத்தால் புலப்படுகிறவைகள் அவ்யக்தமென்றும் கண்டுகொள்ளவேண்டும்.

996. மனத்தைப் பிராணனிலும், பிராணனைப் பிரம்மத்திலும் சேர்த்தவர்கள் பிரம்ம ரிஷிகள்.

997. எப்போதும் பரிசுத்தமும்,நல்ல ஆசாரமும், எல்லாப் பிராணிகளிடத்திலும் கருணையும் உள்ளவன் பிராம்மணன்.

998. சூத்திரன் சூத்திரனுகவே இருக்கவேண்டுமென்றும் பிராம்மணன் பிராம்மணனுகவே இருக்கவேண்டுமென்றும் இருப்பானென்றும் வேதமுடிவை அறிந்த மஹரிஷிகள் சொல்லவில்லை.

999. மூன்றவஸ்தைகளுக்குட் பட்டு அத்வைதம் பேசுவது முறையல்ல.

1000. பரோக்ஷ ஞானத்தால் ஜகத்பிராந்தியும், அபரோக்ஷ ஞானத்தால் ஜென்மப் பிராந்தியும், பிராரப்தக்ஷயத்தால் ஜகத் தோற்றமும் நசிக்கும்.

1001. மூன்றவஸ்தைகளையும் வாராமற்செய்கிற ஆருடி யோகத்தால் இரண்டில்லாத ஞானத்தை அடையலாம்.

1002. எந்த மதஸ்தனுக்கும் துவைதமில்லாத துரியானுபவம் வாய்க்காமல் முக்தி கிடைக்கிறதில்லை.

1003. எந்தக் காலத்தில் அந்தரங்கமாகத் தன்னைத் தரிசிக்கிருனே அப்போதிருப்பது பரமயோகானந்தம்.

1004. வேதத்திலும் குருவசனத்திலும் மாருத நம்பிக்கை கொண்டிருக்கிறவன், அழிவில்லாத பதவிகளை அடைகிருன்.

1005. சுவர்க்கத்தில் சுகம் மட்டும் உண்டு,நரகத்தில் துக்கம் மட்டும் உண்டு. மனுஷலோகத்தில் சுகதுக்கம் இரண்டு முண்டு.

1006. சாதுக்களுக்குக் கொடுக்கிற தானத்தின் பயன் பரலோகத்திலும் அஸாதுக்களுக்குக் கொடுக்கப்படுகிற தானத்தின் பயன் இவ்வுலகத்திலும் வந்து சேருகின்றன.

1007. ஹோமத்தால் பாபம் விலகுகிறது. வேதாத்தியயனத்தால் சாந்தமுண்டாகிறது.

1008. விதிப்படி பிரஜைகளை உண்டுபண்ணுவதால் பிரம்மதேவரும், யாகஞ்செய்வதால் தேவர்களும், தர்ப்பணஞ்செய்வதால் பிதுர்க்களும் வேதவித்தையைக் கற்பதால் ரிஷிக்கூட்டங்களும், நிவிர்த்தி ஞானத்தை அடைவதால் வாசுதேவரும். உலகத்தை மறப்பதால் எமனும், சந்தோஷமடைகிறார்கள்.

1009. சமமான உலகம், சம்பத்து, ஞானம், ராஜ்யம், சக்தி அடக்கம், சுதந்தரம், புண்ணியம், பாபம், பரிகாரம், செல்வம், வினயம், பதம், கபடம், யோகம், ஸ்திரீ, சிநேகம், வீடு, வாகனம், சந்திப்பு, சாந்தம், பிரவிர்த்தி, யாத்ரை, இவைகளை எல்லா லோகங்களிலுமுள்ள ஜனங்கள் கருதுகிறார்கள்.

1010. கெட்ட வினயமான வஞ்சகத்தை விட்டுவிட்டாலும் நல்ல வஞ்சகமில்லாதவர்கள் உலகத்தில் உண்மையோடிருக்க முடியாது.

1011. மலையருவிகளின் ஸ்நானம் தபசிகளுக்குத் தபத்தை விருத்தியாக்குகிறது.

1012. ஆகார முதலிய அவஸ்யமான தன் ஆசை பங்கமடைந்தவனாகித் திரும்பிச் செல்லுகிற அதிதியானவன் தன் பாபத்தைக் கொடுத்து விட்டு அவன் புண்ணியத்தை எடுத்துக்கொண்டு செல்லுகிறான்.

1013. உலகம் எப்போதும் உள்ளதாகவே இருக்கிறது.

1014. ஜீவன் பிரஹ்மத்திலுண்டாகிப் பிரம்மத்திலேயே நசிக்கிறான்.

1015. அப்பியாஸ காலத்தில் அவச்சேத வாதத்தையும் அனுபவ காலத்தில் ஆபாஸ வாதத்தையும் மஹரிஷிகள் அங்கிகரிக்கிறார்கள்.

1016. விசேஷ புருஷர்கள், யதார்த்தவாதிகள், தத்துவ மஹான்கள், உண்மைகண்டவர்கள், உத்தமயோகிகள், நிவிர்த்தி மார்க்கத்தில் நிற்பவர்கள் இவர்கள் தர்க்கம் செய்யவும் செய்கிறவர்களுக்கு இடமுங்கொடுக்கமாட்டார்கள்.

1017. வனங்களிலுள்ள மூலிகைகள், கனிகள், காய்கள், கிழங்குகள், வேர்கள், பழுத்ததும் காய்ந்ததுமான இலைகள் இவைகளையே ஆகாரமாகக் கொண்டவர்களுக்குத் தபோ அக்னி வளருகிறது.

1018. நாணல், மரவுரி, குசை தோல், தண்டம் இவைகளை கொண்டு அரண்யத்திற் சஞ்சரிக்கும் தபசிகளிடம் தபோ தேவர் கள் வந்தடைகிறார்கள்.

1019. நாசிகையின் அருகிலுள்ள புருவங்கள், மூக்கு, நெற்றி, இவைகளின் சந்தி ஸ்தானங்களில் புண்ணியசாலிகள் அடையத்தக்க லோகமிருக்கிறது.

1020. பரவாசு தேவர், பஞ்சமூர்த்திகள், லக்ஷ்மி, ஸரஸ் வதி, பார்வதி, கங்கை, சாவித்திரி, காயத்திரி, காளி, முருகன், கணபதி, மாயாசக்தி, காலசக்தி, மிருத்யுதேவதை, பராசக்தி, சப் தரிஷிகள், நவக்ரஹங்கள், அஷ்டவசுக்கள் அஷ்டதிக்பாலகர்கள் பஞ்சமஹாபூதங்கள், தசாவதாரங்கள், சித்தர்கள், ரிஷிகள், ஞானி கள், பக்திமான்கள், கர்மயோகிகள், பாரததேவி, பூமிதேவி ஆதி சேஷன், நித்யசித்தாதிகள், ஏகாதசருத்ரர்கள், திக்குதேவதைகள் யோகிகள், மஹம்மேரு, ஹிமவான், சப்தசாகரங்கள், துருவம், பிதுர்தேவர்கள், விஸ்வேதேவர்கள், சிருஷ்டிகர்த்தாக்கள், சப்தநதி கள், திரிமதாசாரியர்கள், ஆழ்வார்கள், நாயன்மார்கள், நான்குவேத ங்கள், ஸ்மிருதிகள், ஆகமங்கள் வேதாகமங்கள், புராணங்கள், இதிகாசங்கள், பலசாஸ்திரங்கள், மனம், சரீரம், அன்னம், உலகம் மழை, ஆறுகள், பருவதங்கள், ஜனங்கள், அரசர்கள், பிராம்மண ர்கள் கற்புள்ள மாதர்கள். இவர்கள் அனைவர்களுக்கும் தனித் தனியாக தினந்தோறும் மனதிற் பூஜைசெய்து நமது ஞானமோ க்ஷ மார்க்கங்களுக்கு உதவிசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்து வரவேண்டும்.

ஓம்.

தத். ஸத்.

மீரானியா பிரஸ், திருநெல்வேலி. 12—27.

ஞானி உயர்ந்த ஜாதி    ஓம். தத். ஸத்.    அஞ்ஞானி தாழ்ந்த ஜாதி.

க. கடவுளைக் கண்டு முடிந்தவன் பிராமணன்.
உ. கடவுளைக் காணத் தீவிர அப்பியாஸம் செய்பவன் க்ஷத்திரியன்.
ங. கடவுளைக் காணவேண்டிய சாதனங்களைச் சேர்ப்பவன் வைசியன்.
ச. கடவுளைக் காணும் ஆரம்பப்படியி லேறியவன் சூத்திரன்.
ரு. கடவுளைக் காண்பதின் யாதொரு முயற்சியுமின்றி யிருப்பவன் பஞ்சமன்.

## பிரஹ்ம சாக்ஷாத்காரம். ஜனன மரண நிவிர்த்தி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பரிசுத்தம் | எங்கே | உதயமோ | அங்கே | பக்தி | உதயம். |
| பக்தி | எங்கே | உதயமோ | அங்கே | அன்பு | உதயம். |
| அன்பு | எங்கே | உதயமோ | அங்கே | சாந்தம் | உதயம். |
| சாந்தம் | எங்கே | உதயமோ | அங்கே | சக்தி | உதயம். |
| சக்தி | எங்கே | உதயமோ | அங்கே | ஞானம் | உதயம். |
| ஞானம் | எங்கே | உதயமோ | அங்கே | கிருபை | உதயம். |
| கிருபை | எங்கே | உதயமோ | அங்கே | கடவுள் | உதயம். |
| கடவுள் | உதயம் | பெற்றவர் | கடவுளே | ஆகிறார். | |




விலக்ஷணானந்தர்.